உ

சிவமயம்.

---

திருக்குறள் அருளிச்செய்த

# திருவள்ளுவநாயனார்

# குருபூஜைநாள்

## உண்மைவிளக்க வாராய்ச்சி.

:o:

இது

குடியரசுப் பத்திரிகையில் இராமாயணப்போலி

ஆராய்ச்சிக் கட்டுரைகளைச்

சந்திரசேகரப்பாவலர் என்னும் புனை பெயர்பூண்டு எழுதிவரும்

நாங்குநேரி போர்ட் ஸ்கூல் தமிழ்ப் பண்டிதரும்

திருவாவடுதுறை தருமபுர ஆதீனங்களின்வித்துவானென்று

தாமேதம்மைச் சொல்லி வெளியிடுபவரும்

பஞ்சாங்க கணிதருமான

**திரு. இ. மு. சுப்பிரமணியபிள்ளை**

திருக்குறள் அருளிச்செய்த திருவள்ளுவநாயனார்

குருபூஜைநாளை மாற்றி எழுதியதன் மறுப்பு.

---

'அரங்கின்றி வட்டாடி யற்றே நிரம்பிய

நூலின்றிக் கோட்டி கொளல்.'

---


வைதிகசைவ சம்மேளனம்

திருநெல்வேலி.

1931

---

திருநெல்வேலி ஜங்ஷன்

ஸ்ரீ காந்திமதி விலாசம் பிரஸில் பதிப்பிக்கப்பெற்றது.


இதன்பிரதி வேண்டுவோர் 1அணா ஸ்டாம்பு அனுப்பிப் பெற்றுக்கொள்ளலாம்

உ

சிவமயம்.

---

திருக்குறள் அருளிச்செய்த

# திருவள்ளுவநாயனர் குருபூஜைநாள்

## உண்மைவிளக்க வாராய்ச்சி.

—:o:—

2—3—31ல் வெளிவந்த சிவநேசன் பக்கம் 8ல் திருக்குறள் அருளிச்செய்த திருவள்ளுவ நாயனாரது குருபூஜைத் தினம் மாசியுத்தரமென்றும், அது ஸ்ரீமத் ஆறுமுக நாவலரவர்கள் இரண்டாஞ் சைவ வினவிடையிற் கூறுவதாலும் பழைய வெண்பா ஒன்று 'மாசியுத்த ரத்தினத்தில் வள்ளுவனர் மாநிலம்விட், டாசில்பா முத்தி யடைந்தனரால்' என்று வருவதாலும் அறியப்படுமென்றும், குடியரசுப் பத்திரிகையில் இதிகாசஆராய்ச்சிக் கட்டுரைகளைச் சந்திரசேகரப் பாவலர் என்னும் புனைபெயர் பூண்டு எழுதிவரும் நான்குநேரி போர்ட் ஸ்கூல் தமிழ்ப்பண்டிதர் திரு. இ. மு. சுப்பிரமணியபிள்ளையவர்கள் தமது சைவப் பஞ்சாங்கத்தில் இப்பொழுது மூன்று ஆண்டுகளாக முன் வழக்கத்திற்கு மாருகத் திருக்குறள் அருளிச் செய்த திருவள்ளுவ நாயனாரது குருபூசைத்தினம் வைகாசி அநுஷமென்று குறிப்பிட்டு வருவது பொருந்தாதென்றும் யாம் எழுதினேம்.

அதற்கு மறுப்பாக 6—4—31ல் வெளிவந்த சிவநேசன் பக்கம் 10ல் திரு. சி. திரவியப்பிள்ளை 'திருவள்ளுவ நாயனர் குருபூசைவிழா வைகாசி அனுடமும், பிறந்த நாள்விழா மாசி உத்தரமும் என்பதன் உண்மை விளக்கம்' என்னும் கட்டுரையை எழுதியிருக்கிறார். அக்கட்டுரையில் அவர் எம்மைக் குறித்தும் எமது வைதிக சைவ சம்மேளனத்தைக் குறித்தும் சில பல எழுதியிருக்கிறார். யாம் இன்னமென்றும் எமது சம்மேளனம் இன்னதென்றும் அவர் அறிந்தாராயின் அவ்வாறெல்லாம் எழுதித் தமது அறியாமையைப் புலப்படுத்தியிரார். இனியேனும் அவர் அறிந்து தெளிவாராக.

இனித் திருக்குறள் அருளிய திருவள்ளுவ நாயனர் குருபூசை நாள் சம்பந்தமான விஷயத்தை ஆராய்வோம். திரு இ. மு. சுப்பிரமணியபிள்ளை தாம் கணிக்கும் பஞ்சாங்கத்தில் தமக்குள்ள பொறுப்பை உணர்ந்தவராயிருந்தால், திருவள்ளுவ நாயனர் குருபூசைத் தினம் மாசி உத்தரமென்று பல ஆண்டுகளாக நாம் குறிப்பிட்டுவந்ததை மாற்றி வேறொருநாள் முதல் முதல் குறிப்பிட முன்வந்த காலத்து அதற்குரிய காரணங்களை ஆவசியகமாகக் குறிப்பிட்டிருத்தல் வேண்டும். அவ்வாறு அவர் செய்திலர்.

1929 டிஸம்பர் 17, 18, 19, 20-ம் தேதிகளில் திருப்பாதிரிப்புலியூரில் 'சைவ மகாநாடு' என்னும் பெயராற் கூடிய ஒரு கூட்டத்தில 'தமிழ் மக்கள் வானநூலும் சிவ விரதங்களும்' என்ற பொருள் பற்றித் திரு. இ. மு. சுப்பிரமணியபிள்ளை சொற்பொழிவு நிகழ்த்தவிருந்த காலத்தில் எமது நண்பர் திரு. S. சந்தனம்பிள்ளையவர்கள் ஷெ பிள்ளையவர்களுக்குத் தாம் திருக்குறள் அருளிச்செய்த திருவள்ளுவ நாயனர் குருபூசைத் தினத்தை முன் வழக்கத்திற்கு மாறாக வைகாசி அநுஷம் என்று குறிப்பிட்டிருப்பதற்குரிய ஆதாரவுகளைச் சபையாருக்கு விளக்கிக்காட்டி உலகத்தாருக்குப் பத்திரிகை வாயிலாக வெளியிடும்படி கடிதம் எழுதிக் கேட்டிருந்தார்கள். அக்கடிதத்திற்கும் திரு. இ. மு. சுப்பிரமணியபிள்ளை இது காறும் விடையிறுத்திலர்.

ஆனல் தாம் மாறுபடக்குறித்த வைகாசி அநுஷத்தையும் திரு. இ. மு. சுப்பிரமணியபிள்ளை விட்டாரில்லை. ஒரு முக்கியமான குருபூசை விஷயத்தில் ஷெயார் யாதொரு காரணமும் குறியாது தாம் புதிதாகக் கற்ற பாடத்தை மட்டும் திரும்பத் திரும்ப ஒப்புவித்து வருவது கண்டு, சநாதன தர்மிகள் மயங்காமல் திருக்குறள் அருளிச்செய்த திருவள்ளுவ நாயனர் குருபூசையை முன் வழக்கம்போல் மாசி யுத்தரத்திலே நடத்தவேண்டுமென்ற நோக்கத்தால் யாம் அவ்விஷயம் எழுதலானோம். அதற்கும் ஷெ திரு இ. மு. சுப்பிரமணியபிள்ளை இன்னும் விடை கூறினரில்லை.

இப்பொழுது திராவியம்பிள்ளை ஷெ திரு. இ. மு. சுப்பிரமணியபிள்ளைக்குத் திருக்குறள் எழுதிய பழைய ஏடு ஒன்றில்

கும்பமதி யுத்தரத்தில் கோள்களுயர் சீர்பெறவே
இம்பருல கெய்துதிரு வள்ளுவனுர்—செம்பவள
மேனியான் சீரடியில் மேவுதிரு நாளனுடன்
தானிடப நன்மதியே தான்.

என்ற செய்யுள் கிடைத்ததென்றும், அப்புதிய செய்யுள் விஷயத்தை வலியுறுத்தித் திரு. கா. சுப்பிரமணியபிள்ளை யெழுதிய திருக்குறட் பொழிப்புரை முகவுரைக் குறிப்பு வெளிவந்ததென்றும், திரு. இ. மு. சுப்பிரமணியபிள்ளை மயிலாப்பூரில் திருவள்ளுவர் சங்க அமைச்சரை வினவியதில் அவ்வமைச்சர் திருமயிலைத் திருவள்ளுவர் கோயிலில் பண்டு தொட்டே வைகாசி அனுடத்தில் திருவள்ளுவர் குருபூசை நடந்துவருகின்றதென்று சொல்லித் திருவள்ளுவ நாயனுர் புராணத்தில் வீடுபெறெய்து படலத்துச் செய்யுளொன்றை அதற்கு ஆதாரமாகப் படித்துக் காட்டினுரென்றும், அவ்வாதாரங்களைக்கொண்டே திரு. இ. மு. சுப்பிரமணியபிள்ளை திருவள்ளுவநாயனுர் குருபூசைத் தினத்தை முன் வழக்கத்திற்கு மாருக மாற்றி எழுதினுரென்றும் எழுதுகிருர்.

இத்திரவியம்பிள்ளை கூறும் விஷயங்களை ஆராய வேண்டுவது ஆவசியகமே. திரு. இ. மு. சுப்பிரமணியபிள்ளைக்குத் திருவாவடுதுறை யாதீனத்திலுள்ள உண்மையான சம்பந்தம் எப்படியிருந்தபோதிலும், அவர் தம்மை ஷை ஆதீனவித்துவானென்று சொல்லிக்கொள்ளும் நிலைமையில் தமக்குத் திருக்குறள் எழுதிய பழைய ஏடு ஒன்றில் புதிதாகக் கிடைத்த அச்செய்யுளை எங்ஙனம் உண்மையானதென்று நம்பினுரென்று யாம் கேட்கிருேம்.

சைவ சித்தாந்த பரம்பரையிலுள்ள ஆசாரியர்களின் குருபூஜை நக்ஷத்திரங்களைக் குறிப்பிடுபவர்களெல்லாம் மாதத்தை முன்னும் நக்ஷத்திரத்தைப் பின்னும் குறிப்பதே வழக்கமாயிருக்கின்றது. ஸ்ரீ சேக்கிழார் சுவாமிகள் திருநாவுக்கரசு நாயனுர் முத்திபெற்ற நக்ஷத்திரத்தைச் 'சித்திரையிற் சதயமாந் திருநாளில்' என்று மாதத்தை முன்னும் நக்ஷத்திரத்தைப் பின்னும் குறித்தார்கள்.

சைவ சமயாசாரியர்கள் ஸ்ரீ சேக்கிழார் சுவாமிகள் இவர்களது குருபூஜை நக்ஷத்திரங்களைக் குறிப்பிடும் பழம்பாடல்

'பாடிய சம்பந்தர் வைகாசி மூலம் பயிலுமப்பர்
நீடிய சித்திரை மாதச் சதய மிறைவன்றொண்ட
ராடியிற் சோதி திருவாத வூரர்நல் லானிமகஞ்
தேடிய சேக்கிழார் வைகாசிப் பூசஞ் சிறந்தனரே'

என வருகின்றது. இச்செய்யுளும் மாதத்தை முன்னும் நக்ஷத்திரத்தைப் பின்னும் கூறுகின்றது.

அறுபத்துமூன்று நாயன்மார்கள் குருபூஜை நக்ஷத்திரத்தைக் கூறும் 'தில்லைவா ழந்தணர் திருவரு ளாலவர்........சிவகதியடைத றிண்ண முண்மையதே' என்னும் ஆசிரியப்பாவும் முற்காட்டப்பட்ட ஏனைய செய்யுட்கள்போல மாதத்தை முன்னும் நக்ஷத்திரத்தைப் பின்னும் குறிக்கின்றது.

சைவ சந்தானாசாரியர் குருபூஜை நக்ஷத்திரங்களைக் குறிப்பிடும் பழம் பாடல்

'சித்திரை யத்த முமாபதி யாவணித் திங்கடனி
லுத்திரஞ் சீர்கொண் மறைஞான சம்பந்த ரோதுகன்னிச்
சுத்தமெய்ப் பூர மருணந்தி யைப்பசிச் சோதிதனில்
வித்தக மெய்கண்ட தேவர் சிவகதி மேவினரே'

என வருகின்றது. இச்செய்யுளும் மாதத்தை முன்னும் நக்ஷத்திரத்தைப் பின்னும் கூறுகின்றது.

திருவாவடுதுறை யாதீனத்து மகா வித்துவானுயிருந்த ஸ்ரீ மீனாக்ஷிசுந்தரம்பிள்ளையவர்களும் திருவாவடுதுறை யாதீனத்துக் குருமூர்த்திகளின் குருபூஜை நக்ஷத்திரங்களைக் குறித்துத் தாம் பாடிய 'திருவளர் கயிலைச் சிலம்பில் வீற்றிருக்கும்........வேணவாவானே' என்னும் அகவலில் மாதத்தை முன்னும் நக்ஷத்திரத்தைப் பின்னும் கூறியிருக்கிறார்கள்.

ஸ்ரீ மாதவச் சிவஞான யோகிகள் முத்திபெற்ற திருநக்ஷத்திரத்தைக் குறிக்கும் வெண்பாவும்

'மன்னும் விசுவா வசுவருட மேடமதி
யுன்னிரவி நாட்பகலோ தாயிலியம்—பன்னுந்
திருவான நெய்கோன் சிவஞான தேவன்
திருமேனி நீங்குந் தினம்'

என வருகின்றது. இவ்வெண்பாவும் மாதத்தை முன்னும் நக்ஷத்திரத்தைப் பின்னும் கூறுகின்றது.

இவ்வாறெல்லாமிருப்பவும் திருவாவடுதுறை யாதீன வித்துவானென்று தம்மைச் சொல்லிக் கொள்ளும் சந்திரசேகரப் பாவலராகிய திரு. இ. மு. சுப்பிரமணியபிள்ளைக்குப் புதிதாகப் பழைய ஏட்டிற் கிடைத்ததென்று திரவியம்பிள்ளை சொல்லுகிற 'கும்பமதி' என்னுஞ் செய்யுள் அனுடமென நாளை முன்சொல்லி, 'இடபநன்மதி' யென மாதத்தைப்பின் சொல்லுகின்றது. இச்செய்யுட் பாவலருக்குச் சைவசித்தாந்த சம்பிரதாயந் தெரியாதா அல்லது தாம் கருதியதைக் கருதியவாறே தெரிவிக்குமாறு செய்யுள் செய்யும் ஆற்றலில்லையா என்று யாம் கேட்கின்றோம். சம்பிரதாயம் பிழைபட்ட செய்யுளை மெய்ச் செய்யுளென்று கொண்டிருப்பின் சந்திரசேகரப்பாவலராகிய திரு. இ. மு. சுப்பிரமணியபிள்ளைக்கு ஐயோ!

அன்றியும் அச்செய்யுள் 'அனுடந்தான்' 'இடபநன்மதி யேதான்' என்று இத்துணை வலியுறுத்திக் கூறவேண்டுதற்கு ஆவசியகம் யாது? அச்செய்யுட் பாவலர் திருவள்ளுவ நாயனார் குருபூஜையை முன் வழக்கத்துக்கு மாறாக வைகாசி அனுடத்தில் நடைபெறுத்தவேண்டுமென்று கருதி அவ்வாறு பாடினர் போலும். இன்றேல் அச்செய்யுட்பாவலர் 'கல்லைத்தான் மண்ணைத்தான் காய்ச்சித்தான் குடிக்கத்தான் கற்பித்தானு' என்று பாடிய புலவர்க்கு உடன்பிறந்தார் போலும்.

பாட்டின் தகுதி எப்படியாயினும் ஆகுக. யாம் திருநெல்வேலியில் தக்கபெரியோர் சபைபோன்று கூட்டுமிடத்தில் சந்திரசேகரப்பாவலராகிய திரு. இ. மு. சுப்பிரமணியபிள்ளை அல்லது அவர் மாணாக்கர் திரு. சி. திரவியம்பிள்ளை பிரஸ்தாபத்திலுள்ள

பழைய ஏட்டைக் கொண்டுவந்து காட்டித் தமது கூற்றை நிரூபிக்க முன் வருவாரா என்று யாம் கேட்கிறோம்.

இனித் திரவியம்பிள்ளை திரு. இ. மு. சுப்பிரமணியபிள்ளைக்கு ஆதாரவாகத் திரு. கா. சுப்பிரமணியபிள்ளையின் திருக்குறட் பொழிப்புரை முகவுரைக் குறிப்புக் கிடைத்ததாகக் கூறும் விஷயம் கவனிக்கத்தக்கது. ஏகோத்திஷ்டக்காரனுக்குச் சபிண்டிக்காரன் சாக்ஷி யென்பது ஒரு பழமொழி. திரு. கா சுப்பிரமணியபிள்ளை தாம் எழுதிய திருக்குறட் பொழிப்புரையில் இலக்கண விரோதமாக எழுதியன பல: வழக்கு விரோதமாக எழுதியன பல. அன்றியும் அவர் திருக்குறள் மூலத்து வரும் 'அறுதொழிலோர்' என்றதை எவ்வகைப்பிரமாணமுமின்றி 'அறிதொழிலோர்' என்று மாற்றியவர்: மேலும் பிரத்தியக்ஷமாகச் சைவஸ்தாபனங்களாகிய சிவாலயங்களிலும் சைவமடாலயங்களிலும் ஆட்சியிலிருந்து வரும் வேதாகமங்களைச் சைவசமயப் பிரமாண நூல்களல்லவென்று நாத்திகச் சார்பாய்நின்று பேசியும் எழுதியும்வரும் புதிய கோட்பாடுடையார். அவர் தமது புதிய பொழிப்புரையில் பிழைபடக் கூறும் விஷயங்கள் அனைத்தையும் அவரது பொழிப்புரையை யாம் ஆராய்ந்து வெளியிடுங்காலத்து விளக்குவாம். அவர் கூறும் விஷயங்கள் எத்துணை உண்மையுடையன என்பதனைத் திரவியம்பிள்ளை அறிய விரும்பினால் யாம் சிவநேசனில் 30-3-31 முதல் எழுதிவரும் 'தமிழ் இலக்கிய வரலாற்றாராய்ச்சி' யிற் கண்டு தெளிவாராக.

இனித் திருவள்ளுவநாயனார் புராணம் ஒன்றிருக்கின்றதென்றும் அதில் வீடுபேறெய்து படலத்தில் திருவள்ளுவநாயனார் குருபூசை நாள் வைகாசி அநுஷமென்று சொல்லப்பட்டிருக்கிறதென்றும் மயிலாப்பூர்த் திருவள்ளுவர் சங்க அமைச்சர் சொல்லி அப் புராணப்பாடலைத் திரு. இ. மு. சுப்பிரமணியபிள்ளைக்குவாசித்துக் காட்டியதாகத் திரவியம்பிள்ளை கூறுகிறார். அப்புராணச் செய்யுளைத் திருவள்ளுவர் சங்க அமைச்சர் படித்துக் காட்டியிருக்கலாம். அதைத் திரு. இ. மு. சுப்பிரமணியபிள்ளை கேட்டிருக்கலாம் அதனை யாம் ஆக்ஷேபிக்கவில்லை. ஆனால் திரு. இ. மு.

சுப்பிரமணியபிள்ளை திருக்குறள் அருளிச்செய்த திருவள்ளுவ நாயனர் குருபூசைத் தினத்தைத் தாம் புதுவதாக மாற்றிப் பஞ்சாங்கத்தில் எழுதும்போது குறிப்பிடாதது மட்டுமன்றி, இப்பொழுதும் தமக்குப் பிரமாணமாகிய அச் செய்யுளைக் குறித்தெழுதும்படி தம் மாணக்கர் திரவியம்பிள்ளைக்கு ஏன் கற்பித்திலரென்று யாம் கேட்கிறோம். பிரபவ ஆண்டிலே (1927-ம்வூ) விரைவாக வெளிப்படுத்தப்படுமென்று கூறப்பட்ட அப்புராணம் நான்கு ஆண்டுகளாகக் கர்ப்பத்திலேதான் இருக்கின்றதா? அப்புராணச் செய்யுள் வெளிவந்தால் அதன்சாயம் வெளுத்துவிடுமென்று திரு. இ. மு. சுப்பிரமணியபிள்ளை அஞ்சுகின்றாரா? அன்றித் திரு. இ. மு. சுப்பிரமணியபிள்ளை அச் செய்யுளை மறந்தொழிந்தாரா? கேட்ட மாணவர் தாம் மறந்து விட்டாரா?

மேலும் அத் திருவள்ளுவநாயனர் புராணம் பழைமையானதொன்றாயின், திருக்குறள் தோன்றிய காலந்தொட்டுத் திருவள்ளுவரைப் போற்றிவரும் இத்தமிழுலகம் இதுகாறும் அதனை வெளிப்படுத்தாதிருக்குமா? அப் புரா ணத்தை வெளிப்படுத்துதற்கு ஓர் நம்பியாண்டார் நம்பிகள் வேண்டப் படுகிறார் போலும்! தமிழ்மறையென ஒன்றிருந்து கடலாவடித்துக்கொண்டு போகப்பட்டதாக இக்காலைப் புதுக் கோட்பாடுடையார் கூறுதலின், அஃதொப்ப இப்புராணமும் — (கடலருகேயுள்ள மயிலாப்பூரில் திருவள்ளுவர்சங்க அமைச்சரிடம் ஒருபிரதிபாகத்தான் இருப்பதால்) கடல் கொண்டுபோய் விடாதபடி திரு. இ. மு. சுப்பிரமணியபிள்ளை வேண்டும் முயற்சியெடுத்து அச்சிட்டுப் பாதுகாப்பார் என்று எதிர்பார்க்கிறோம். அப் புராணம் வெளிவரின், அந்நூல் முழுவதும் யாம் பரிசீலனை செய்வாம்.

இனித் திரவியப்பிள்ளை கூறும் மயிலாப்பூர்த் திருவள்ளுவர் ஆலய விஷயத்தை யாராயுமுன் திருவள்ளுவரைப்பற்றி யாம் சிறிது ஆராயவேண்டுவது இன்றியமையாததாகிறது. திருவள்ளுவர் என்னும் பெயருடையார் இருவர் இருக்கின்றார்கள். அவருள் ஒருவர் திருக்குறளைப் பாடியருளிய திருவள்ளுவநாயனர். மற்றொருவர் ஞானவெட்டியான் என்னும் நூலை இயற்றிய திருவள்

ளுவர். இவ்விருவருள் முதற்கட் கூறப்பட்ட திருக்குறள் அருளிய திருவள்ளுவநாயனர் சித்தாந்த சைவர். இவ்வுண்மை அவர் கடவுள் வாழ்த்து என்னும் முதலதிகாரத்தில் சித்தாந்தத்திற் கூறப்படும் அடிசேர் முத்தியைக் கூறியருள்வதால் அறியப்படும். அன்றியும் சேரமான் பெருமாள் நாயனர் திருக்கயிலாய ஞான வுலாவினும், திருக்கடவூர் உய்யவந்த தேவநாயனர் திருக்களிற்றுப் படியாரினும், ஸ்ரீ உமாபதிசிவாசாரிய சுவாமிகள் நெஞ்சுவிடு தூதினும், ஸ்ரீ சிவஞான சுவாமிகள் சிவஞானபாடியத்திலும் அவர் பாடியருளிய திருக்குறள் வெண்பாக்களைப் பிரமாணமாக எடுத்தாண்டுபோற்றுகின்றார்கள். அவரது குருபூசைத் திருநக்ஷத்திரம் மாசியுத்தரம். இவ்விஷயம் முன்னர் யாம் பிரமாணமாகக் காட்டிய ஸ்ரீமத் ஆறுமுக நாவலரவர்களது இரண்டாஞ் சைவ வினவிடைப் பகுதியாலும், மாசியுத்தரத்தினத்தில் வள்ளுவனார் மாநிலம்விட்டாசில்பா முத்தி யடைந்தனரால்' எனவரும பழைய வெண்பாவாலும் விளங்கும். காரைக்குடி முதலிய பல இடங்களிலுள்ள குருபூஜை மடத்தார்களும் குருபூஜை நக்ஷத்திரங்களைக் குறிப்பிடும் அட்டவணையில் திருவள்ளுவநாயனர் குருபூஜை நக்ஷத்திரம் மாசியுத்தரமென்றே நெடுங்காலமாகக் குறிப்பிட்டு வருகின்றார்கள். சென்னை B இரத்தின நாயகர் அண்டு சன்ஸ் கம்பனியாரால் வெளியிடப்பட்டிருக்கும் திருக்குறட் பரிமேலழகருரைப் புத்தகத்தில் 'திருவள்ளுவ நாயனர் திவ்விய சரித்திரம்' என்ற பகுதியிலும் திருக்குறள் அருளிச் செய்த திருவள்ளுவ நாயனரது குருபூஜை நக்ஷத்திரம் மாசியுத்தர மென்பதே குறிக்கப்பட்டிருக்கிறது.

மற்றொருதிருவள்ளுவராகிய ஞானவெட்டியான் பாடிய திருவள்ளுவரோ சித்தாந்த சைவராற் போற்றப்படுபவரல்லர். அவரது நூலிலே சரீரத் தோற்றமும் சில வைத்திய முறைகளும் கூறப்படுகின்றன. அவரது குருபூசைத்தினம் வைகாசி அனுடம் இவ்விஷயம் திருமயிலைத் திருவேங்கட முதலியாரால் அச்சிட்டு வெளியிடப்பட்டிருக்கும 'ஞான வெட்டியான் 1500' என்ற புத்தகத்தில்வரும் திருவள்ளுவர் சரித்திரக் குறிப்பினால் விளங்கும்.

ஆகவே திருவள்ளுவரென்னும் பெயருடையார் இருவ ரென்பதும் அவருள் ஒருவர் திருக்குறள் பாடியருளிய திருவள் ளுவநாயனாரென்பதும் அவரேசித்தாந்த சைவராய்ச் சித்தாந்த சைவர்களாற் போற்றப்படும் தகுதிவாய்ந்தோரென்பதும், அவ ரது குருபூஜை நாள் ஸ்ரீமத் ஆறுமுகநாவலரவர்கள் முதலியோர் குறித்துள்ளபடி மாசியுத்தரமேயென்பதும், மற்றொரு திருவள் ளுவர் ஞானவெட்டியான் பாடிய திருவள்ளுவரென்பதும், அவர் சித்தாந்த சைவர்களாற் போற்றப்படுபவரல்லரென்பதும், அவரது குருபூஜைநாள் ஞானவெட்டியான் நூலில் ஆசிரியர் சரித்திரத்திற் குறிக்கப்பட்டபடி வைகாசி அனுஷமே யென்பதும் பெறப்பட் டன.

இனி மயிலாப்பூரிலுள்ள திருவள்ளுவர் ஆலய விஷயத்தை யாம் ஆராய்வோம். மயிலாப்பூரில் முண்டகக் கண்ணியம்மை கோ விற்றெருவிலுள்ள திருவள்ளுவர் ஆலயமே திரவியம்பிள்ளை பிரஸ் தாபிக்கும் ஆலயமாகும். அந்த ஆலயமோ, நமது சித்தாந்த சை வாசாரியர்களாலும் சிவாகமங்களாலும் அகப்புறச் சமயத்தா ரென்று திருத்தப்பட்டவர்களும் இலிங்கங் கட்டிகளென்று பெயர் வழங்கப்படுபவர்களுமாகிய வீரசைவ மதத்தார் ஆட்சிக்கு உட் பட்டதோர் ஆலயம். அவ்வீர சைவர்கள் தம்முடைய ஆட்சிக்கு உட்பட்ட அவ்வாலயத்தில் வைகாசி மாதத்து அனுட நக்ஷத்திரத் தில் குருபூஜை நடத்திக் கொண்டாடுவதால், அங்கே வழிபடப் பெறும் திருவள்ளுவர் மேலே யாம் காட்டியபடி ஞான வெட்டி யான் பாடிய திருவள்ளுவரே யாவர் என்பது எளிதின் விளங்கும்.

வீரசைவ மதம் நமது சித்தாந்த சைவத்திற்கு எவ்வளவு முரணான கொள்கையும் ஆசாரமும் கொண்ட சமயமென்பது சந் தானசாரியருள் ஒருவராகிய ஸ்ரீமத் உமாபதி சிவாசாரிய சுவாமி கள் அருளிச்செய்த சங்கற்ப நிராகரண மென்னும் நூலாலும் திருவாவடுதுறை யாதீனத்து மூன்றாவது மகா சந்நிதானமா யெழுந்தருளியிருந்த ஸ்ரீலஸ்ரீ அம்பலவாண தேசிக சுவாமிகள் அருளிச்செய்த பாஷண்டநிராகரண மெனனும் நூலாலும் தெளி யப்படும். ஆதலின் சித்தாந்தச் செல்வர்களாகிய எமக்குச் சி—

குறள் பாடியருளிய திருவள்ளுவ நாயனார் குருபூஜை நாள் மாசி யுத்தரமென்றுளமது சித்தாந்தபாரம்பரையில் பண்டுதொட்டுவரும் வழக்கமே பிரமாணமாகும். எமதன்பர் மாவடி மகா-ா-ா-ஸ்ரீ ச. சிவகுருநாதபிள்ளை யவர்களிடம் திருக்குறள் பாடியருளிய திருவள்ளுவ நாயனார் குருபூஜை மாசியுத்தரத்திலே நடத்தப் பட்டு வருகிறதென்பதற்கு 35 வருடங்களுக்கு மேற்பட்ட ஆதா வுகள் இருக்கின்றன என்பதையும், அறிஞர் முன்னிலையில் அவை கள் வெளியிடக்கூடுமென்பதையும் யாம் இங்கே கூறுகின்றோம். விதவையை மணப்பது தெய்வமணமென்று கூறும் ஒரு சிறு நூலுக்கு அசம்பாவிதமான காரியங்களைக்கண்டு முகவுரை எழு தும் சந்திரசேகரப் பாவலராகிய திரு. இ. மூ. சுப்பிரமணிய பிள்ளை தம்மைப் பெயரளவில் சித்தாந்த சைவரென்று கூறிக் கொண்டு சித்தாந்த சைவசிஷ்டாசாரத்தை அப்பிரமாணமென்று கழித்து வீரசைவ ஆலய அநுஷ்டானத்தைத் தாம் மேற்கொள் வதோடு அமையாது பிறரும் கைக்கொள்ளுமாறு மயக்கச்செய் வது அம்மம்ம! பெருங்கொடும்பாவம்.

இனித் திரவியம்பிள்ளை மயிலாப்பூரில் திருவள்ளுவரது பிறந்தநாள் விழா மாசியுத்தரத்தில் நடப்பதாகக் கூறுகிறார். இத னையும் யாம் ஆராய்தல் வேண்டும். பிறந்தநாள் விழாவாயினு மாகுக; குருபூஜை விழாவாயினுமாகுக; இரண்டிலும் ஆலயத்தில் அபிஷேகம் அலங்காரம் பூசை மாகேசுரபூசை எழுந்திருத்து என்பவைகள் ஒப்ப நிகழும். இங்ஙனமாக இதனைப் பிறந்த நாள் விழா என்று திரவியம்பிள்ளை கருதியது எங்ஙனம்? நிற்க, இது காறும் சைவ சித்தாந்த ஆசாரியர்களில் எவருக்கேனும் எந்த ஸ்தலத்திலேனும் பிறந்தநாள் விழா நடக்கின்றதா என்று யாம் கேட்கின்றோம். சைவ சமயாசாரியர்களில் முதல்வராகக் கொண் டாடப்படும் திருஞான சம்பந்தமூர்த்தி நாயனார்க்கேனும் சீகா ழித் தலபுராணத்தில் அவரது நைமித்திக பூசை நாட்கள் குறித்த செய்யுட்களில் அவரது அவதார நாள் குறிக்கப்பட்டிருக்கின் றதா? இல்லையே. இங்ஙனமாகவும் சித்தாந்த சைவபாரம்பரையில் இதுகாறுமில்லாததோர் நிகழ்ச்சியைக் கூறும் திரவியப்பிள்ளை யையும், அந்நிகழ்ச்சி கூறும் ஓர் செய்யுளைப் புதுவதாகக் கண்ட

திரு. இ. மு. சுப்பிரமணியபிள்ளையையும் உலகம் சீர்தூக்கி நிச்சயிப்பதாக.

மயிலாப்பூரில் வீரசைவர்கள் தமது ஆலயத்தில் வைகாசி அநுஷத்தில் குருபூசை நடத்தி வழிபடும் திருவள்ளுவர் ஞானவெட்டியான் பாடிய திருவள்ளுவரேயென யாம் முன்பு கண்டோம். அவர் தமது நூலில் கம்பர் முதலியவர்களைக் குறிப்பிடுவதோடு மிக்க பிற்காலத்தவனான அதிவீரராம பாண்டியனையும் அவன்பாடிய நைடதத்தையும் குறிப்பிடுகிறார். அதனால் அவர் அதிவீரராமபாண்டியன் காலத்திற்கும் பிற்பட்டவரென்பதை யாம் அறியலாம். இந்த ஞானவெட்டியான் பாடிய திருவள்ளுவர் திருக்குறள் அருளிச்செய்த திருவள்ளுவ நாயனார் முத்திபெற்ற மாசியுத்தரத் தினத்திலே பிறந்திருக்கலாம், அவரது பெற்றோர்கள் அந்நாளின் பெருமையை யுணர்ந்து அவருக்குத் திருக்குறள் பாடியருளிய திருவள்ளுவ நாயனார் பெயரை இட்டிருக்கலாம். ஒரு பெரியார் முத்திபெற்ற நாளில் மற்றொருவர் பிறத்தலில்லை யென்றும், அப்பெரியார் பெயரை அவர் முத்திபெற்ற நாளிற் பிறந்தவருக்கு இடுதலில்லை யென்றும் நியதியுண்டா? இல்லையன்றே. ஆகவே வீரசைவர்கள் ஞானவெட்டியான் பாடிய திருவள்ளுவரது பிறந்தநாள் விழாவைத் தமது அனுட்டானத்திற்கு ஏற்ப மாசியுத்தரத்திலும், அவரது குருபூசை விழாவை வைகாசி அநுஷத்திலும் தமது ஆட்சியிலுள்ள திருமயிலைத் திருவள்ளுவராலயத்தில் நடைபெறுத்துவதில் யாருக்கு என்ன ஆக்ஷேபனை? ஆனால் அவ்வீரசைவர்கள் வழக்கத்தைச் சித்தாந்த சைவர்கள் மேற்கொள்ளவேண்டுமென்று திரு. இ. மு. சுப்பிரமணியபிள்ளை கூறுவது என்ன ஒழுங்குமுறை என்று யாம் வினவுகின்றோம்.

இந்தச் சந்தர்ப்பத்தில் ஸ்ரீமத் ஆறுமுகநாவலரவர்களைப்பற்றி ஒரு சிறிது கூறவேண்டுவது அவசியமாக இருக்கின்றது. ஸ்ரீமத் நாவலரவர்கள் தமக்கு ஜன்மபூமி யாழ்ப்பாணமாயிருந்தும் தாம் சைவ சமயத்தை வளர்ப்பதற்கு அநுகூலமாயுள்ளது சென்னையே என்பது உணர்ந்து சென்னையில்

வசிப்பது தமது புண்ணியப்பேறு என்று கருதிய பெரியார். அப்பெரியார் காலத்து மயிலாப்பூர்த் திருவள்ளுவர் ஆலயம் உளதாயிருப்பவும் அவர்கள் அவ்வாலயத்து நடைபெறும் குருபூஜை நாள் விஷயத்தை உடன்படாமைக்குக் காரணம் யாது? திருக்குறளைப் பரிமேலழகருரையுடன் செவ்வையாய் அழகுபெற அச்சிட்டுத் தமிழ்நாட்டுக்கு உபகரித்த அப்பெரியார் திருவள்ளுவரது குருபூஜைத்தினம வைகாசி அனுஷம் என்று இக்காலத்து ஒருசிலர் கூறுவது பிரமாணங்களால் ஆதரிக்கப்படுவதொன்றாயின் அதனை விடுத்து மாசி உத்தரம் என்று வேறொரு நாள் குறிப்பதற்குக் காரணம் என்னை? இதனைத் திரு இ. மு. சுப்பிரமணியபிள்ளை ஏன் சிந்தித்திலர்.

இனித் திரவியம்பிள்ளை பிரஸ்தாபிக்கும் புராணமும் ஞானவெட்டியான் பாடிய பிற்காலத் திருவள்ளுவர் சரித்திரங்கூறும் புராணமேயாதல் வேண்டுமென்பது அப்புராணம் அவர் வைகாசி வனுடத்தில் முத்தி பெற்றாரென்று கூறுவதாகப் பிரஸ்தாபிக்கப்படுவதால் விளங்கும். அப்புராணத்தில் அவ்வள்ளுவர் திருக்குறள் பாடிய விஷயமும் கூறப்பட்டிருக்கலாம். அப்படிக் கூறப்பட்டிருந்தாலும் அத்திருவள்ளுவர் ஞானவெட்டியான் பாடிய பிற்காலத் திருவள்ளுவரே யாவதில் தடையில்லை. ஏனென்றால் ஞானவெட்டியான் செய்யுள் 1415ல் ஞானவெட்டியான் பாடிய அத்திருவள்ளுவர் தாமே திருக்குறளும் பாடியதாக 'முடித்துவைத்தேன் குறளதுவாய் உலகோர்க்காண்டே' என்று கூறுவதால் என்க. ஆகவே அப்புராணமுடையார் ஞானவெட்டியானிற் கூறப்பட்ட விஷயத்தை மெய்யென நம்பித் திருக்குறள் பாடியதையும் சேர்த்துப் பாடிவிட்டாரென்பதே பொருந்தும்.

இனி அகப்புறச் சமயத்தினராகிய வீரசைவர் கொண்டாடும் ஞானவெட்டியான் பாடிய பிற்காலத் திருவள்ளுவரது குருபூஜைத்தின அநுட்டானத்தைப் பின்பற்றிச் சித்தாந்த சைவர்கள் தமது சமயத்தினராகிய திருக்குறள் பாடியருளிய முற்காலத் திருவள்ளுவ நாயனாரது குருபூஜையை நடத்தல் வேண்டுமென்று துணிந்து, முன்வழக்கத்திற்கு மாறாகத் திருக்குறள்

டியருளிய திருவள்ளுவ நாயனர் குருபூஜைத் தினத்தை மாற் ய திரு. இ. மு. சுப்பிரமணியபிள்ளை, இன்னும் சில்காலத் திந்தால் குடியரசுப் பத்திரிகையில் தாம் எழுதும் இதிகாசக் ட்டுரை ஆராய்ச்சியால் தமக்குக் கிடைக்கும் அற்ப ஊதியக் ருதித் தம் பெயரைச் சந்திரசேகரப் பாவலரென்று மாற்றிக் கொண்டமைபோலப், புறப்புறச் சமயத்தார் அநுட்டானத்தைப் பின்பற்றித் திருக்குறளாசிரியர் பெயர் திருவள்ளுவ நாயனரென் பதன்று 'குண்ட குண்ட' ரென்பதேயாமென்று கூறிப் பெயர் மாற்றியமைப்பர் போலும்.

இதுகாறும் கூறியவாற்ருல் பஞ்சாங்க கணிதர் திரு. இ. மு. சுப்பிரமணியபிள்ளை தமது பஞ்சாங்கத்தில் திருக்குறள் அருளிச் செய்த திருவள்ளுவ நாயனர் குருபூஜைத் தினத்தை முன் வழக் கத்திற்கு மாருகச் சென்ற நான்கு ஆண்டுகளாக வைகாசி அநு டம் என்று குறித்துவருவது பொருந்தாதென்று நாம் எழுதிய கட்டுரைக்கேனும், எமது நண்பர் 18—5—29ல் அவருக்கு எழு திய கடிதத்திற்கேனும் இதுவரை விடைகூற முன்வந்திலரென் பதும், திரவியம்பிள்ளை இப்பொழுது ஷ பஞ்சாங்கத்தாருக்குக் கிடைத்ததாகச் சொல்லும செய்யுள் மாதத்தை முன்னும் நக்ஷத் திரத்தைப் பின்னுமாகக் குருபூஜைத் தினத்தை நிர்ணயித்துச் சொல்லும் சித்தாந்த சைவ சம்பிரதாயத்திற்கு மாருக நக்ஷத் திரத்தை முன்னும் மாதத்தைப் பின்னுமாகக் கூறுதலானும், அச் செய்யுள் 'அநுடந்தான் இடப நன்மதியே தான்' என இத்துணை வலியுறுத்திக் கூறுவதால் அச்செய்யுள் செய்த பாவலர் தமது அபிமதத்துக்கேற்ப அவ்வாறு கூறினரென்பதே கொள்ளப்படு மாதலானும் அது பொருந்தாதென்பதும் திரு. கா. சுப்பிரமணிய பிள்ளை புதியகோட்பாடுடையாரதலின் அவரெழுதிய திருக்கு றட் பொழிப்புரை முகவுரைக் குறிப்பைத திரவியம்பிள்ளை கூறி யது வலியற்றதென்பதும், திருவள்ளுவர் புராணம் புதியதோர் நூலேயாதலின் அதிற் கூறப்பட்டிருப்பதாகச் சொல்லப்படும் விஷயம் மயிலாப்பூரில் நடக்கும் இக்கால வழக்குப்பற்றிக் கூறப் பட்டிருத்தல் கூடுமாதலின் அது பிரமாணமாகாதென்பதும், மயி லாப்பூரினுள்ள திருவள்ளுவராலயம் வீரசைவாலய மாதலின்

அங்கு அவர் கைபாண்டுவரும் வழக்கத்தைச் சித்தாந்த சைவர்களும் ஆதரித்தல் வேண்டுமென்பது தக்கதன்றென்பதும், வீரசைவர் வைகாசியனுடத்திற் குருபூஜை நடத்திக்கொண்டாடும் திருவள்ளுவர் ஞானவெட்டியான் பாடிய திருவள்ளுவரே யென்பதும் பிறவும் கூறுமுகத்தால், ஸ்ரீமத் ஆறுமுக நாவலர் முதலியோர் திருக்குறள் பாடியருளிய தெய்வப்புலமைத் திருவள்ளுவநாயனாரது குருபூஜைத் தினம் மாசியுத்தரமென்று கூறியதே சித்தாந்த சைவர்களால் அநுட்டிக்கத் தக்கதென்பது வலியுறுத்தப்பட்டது.

மாசியுத்த ரத்தினத்தில் வள்ளுவனார் மாநிலம்விட்
டாசில்பர முத்தி யடைந்தனரால்—காசினியிற்
கொல்லா விரதங்கைக் கொண்டீர்க ளெல்லீரு
நல்லார்வஞ் செய்ம்மினந் நாள்.

திருநெல்வேலி
25—5—1931

தி. க. உலகநாதபிள்ளை,
அமைச்சர்,
வைதிக சைவ சம்மேளனம்,
திருநெல்வேலி.

# வெளிவரும் புத்தகங்கள்.

---

1 தமிழ் இலக்கிய வரலாற்று ஆராய்ச்சி. (இது திரு. கா. சுப்பிரமணியபிள்ளையவர்கள் (M. A. M. L.) எழுதிய தமிழ் இலக்கிய வரலாறு என்னும் புத்தகத்தில் மலிந்து கிடக்கும் தவறான விஷயங்களை விளக்குவது).

2 குடியரசுப்பத்திரிகையும்இராமாயணப்போலி ஆராய்ச்சியும் (இது சந்திரசேகரப் பாவலராகிய திரு. இ. மு. சுப்பிரமணியபிள்ளையவர்கள் குடியரசுப் பத்திரிகையில் எழுதிய இராமாயணப் போலி ஆராய்ச்சியின் மறுப்பு).

3 போலி அறிஞர் யார்? (திருநெல்வேலிச் சீமைச் சைவசமய முதல் மகாநாட்டு வரவேற்புக் கழகத்தலைவர் திரு. கா. சுப்பிரமணிய பிள்ளை அவர்களுக்கு (M. A. M. L.) ராஜவல்லிபுரம் நடேச சபையார் விடுத்த 1, 2, 3 பகிரங்கக் கடிதங்களும் மேற்படி மகாநாட்டுத் தலைவர் திரு. மறைமலையடிகளுக்கும் நடேச சபையாருக்கும் வாதசபை விஷயமாக நடந்த சம்பவங்களும் மற்றும் சில ருசிகரமான விஷயங்களும் இதில் அடங்கியிருக்கின்றன).

4 சுயமரியாதை இயக்கச்சூறவளி. (இது சுயமரியாதை இயக்கத்தின் பொருந்தாக் கொள்கைகளைக்கண்டித்துச்சிவசேவகன் எழுதியது).

வைதிகசைவ சம்மேளனம்,
திருநெல்வேலி.

---

குறிப்பு :— மேலேகாட்டிய ஆராய்ச்சிகள் பலவான்குடி சிவநேசன் பத்திரிகையில் 30—3—31 முதல் வெளிவந்து கொண்டிருக்கின்றன. சிவநேசன் விலாசம், திரு. ராம. கு. ராம. இராமசாமிச் செட்டியார் அவர்கள் சிவநேசன் பத்திராதிபர், பலவான்குடி, இராமநாதபுரம்.